# ॥ देवीभुजङ्गस्तोत्रम् ॥

## தேவீ புஜங்க ஸ்தோத்ரம்

(1)

विरिञ्च्यादिभिः पञ्चभिर्लोकपालैः
समूढे महानन्दपीठे निषण्णम् ।
धनुर्बाणपाशाङ्कुशप्रोतहस्तं
महस्त्रैपुरं शङ्करा द्वैतमव्यात् ॥

விரிஞ்ச்யாதிபி: பஞ்சபிர்லோக பாலை:
ஸமூடே மஹானந்த பீடே நிஷண்ணம் ।
தனுர்பாண பாசாங்குச ப்ரோதஹஸ்தம்
மஹஸ்த்ரைபுரம் சங்கராத்வைத மவ்யாத் ॥

ப்ரம்மதேவன் முதலிய ஐந்து லோக பாலர்களால் தூக்கிதாங்கப்பட்ட மஹா ஆனந்த பீடத்தில் அமர்ந்துள்ளதும் வில், அம்பு, பாசம், அங்குசம் இவற்றை கையில் கொண்டதும் சங்கரரைப் பிரியாத த்ரிபுராம்பிகை என்ற ஒளி எங்களை காக்க வேணும்.

(2)

यदन्नादिभिः पञ्चभिः कोशजालैः
शिरःपक्षपुच्छात्मकैरन्तरन्तः ।
निगूढे महायोगपीठे निषण्णं
पुरारेरथान्तःपुरं नौमि नित्यम् ॥

யதன்னாதிபி: பஞ்சபி: கோசஜாலை:
சிர:பக்ஷ புச்சாத்மகை ரந்தரந்த: ।
நிகூடேமஹாயோகபீடே நிஷண்ணம்
புராரே ரதாந்த:புரம் நௌமி நித்யம் ॥

ஒன்றன் பின் ஒன்றாக உள்ளே தலை, இறகு, வால் என்றபடி அமைந்த அன்னமய, பிராணமய, மநோமய, விஜ்ஞானமய ஆனந்தமய கோசங்களால் மறைந்துள்ள மஹாயோக பீடத்தில் அமர்ந்துள்ள த்ரிபுரம் எரித்த பரமேச்வரனின் அக முடையாளை வணங்குகிறேன்.

(3)

विरिंच्यादिरूपैः प्रपञ्चे विहृत्य
स्वतन्त्रा यदा स्वात्मविश्रान्तिरेषा।
तदा मानमातृप्रमेयातिरिक्तं
परानन्दमीडे भवानि त्वदीयम्॥

விரிஞ்சாதிரூபை: ப்ரபஞ்சே விஹ்ருத்ய
ஸ்வதந்த்ரா யதாஸ்வாத்ம விச்ராந்திரேஷா।
ததா மாந – மாத்ரு – ப்ரமேயா திரிக்தம்
பரானந்தமீடே பவாநி த்வதீயம்॥

*பிரம்மன் முதலிய பல உருவங்களுடன் உலகில் விளையாடிய பின் ஸ்வதந்த்ர - ஆத்ம ஸ்வரூபத்தில் சமைந்துவிட்ட பொழுது அளவு - அளப்பவர் - அளக்கப்படுவது என்பவற்றையெல்லாம் தாண்டி உனது பரமானந்த ஸ்வரூபத்தை, ஹே பவானி! வழிபடுகிறேன்.*

(4)

विनोदाय चैतन्यमेकं विभज्य
द्विधा देवि जीवः शिवश्चेति नाम्ना।
शिवस्यापि जीवत्वमापादयन्ती
पुनर्जीवमेनं शिवं वा करोषि॥

விநோதாய சைதந்தயமேகம் விபஜ்ய
த்விதா தேவி ஜீவ: சிவஸ்சேதிநாம்நா।
சிவஸ்யாபி ஜீவத்வ மாபாதயந்தீ
புனர்ஜீவமேநம் சிவம் வா கரோஷி॥

*உலக விளையாட்டிற்காக ஒரே சைதன்யத்தை ஜீவனென்றும் சிவனென்றும் இருகூறுகளாகப் பிரித்து, சிவத்திற்கும் ஜீவத் தன்மையை உண்டாக்கி, பின் ஜீவனையும் சிவமாகவே கூட செய்து விடுகிறாய் ஹே பவானி!*

(5)

समाकुञ्च्य मूलं हृदि न्यस्य वायुं
मनो भ्रूबिलं प्रापयित्वा निवृत्ताः।
ततः सच्चिदानन्दरूपे पदे ते
भवन्त्यम्ब जीवाः शिवत्वेन केचित्॥

ஸமாகுஞ்ச்ய மூலம் ஹ்ருதி ந்யஸ்ய வாயும்
மநோ ப்ரூபிலம் ப்ராபயித்வா நிவ்ருத்தா:।
தத:ஸச்சிதானந்தரூபே பதே தே
பவந்த்யம்ப ஜீவா: சிவத்வேந கேசித்॥

ஒருசிலர் (ஜீவர்கள்) மூலாதாரத்தை சற்று குறுக்கி வளைத்து, பிராண வாயுவை ஹ்ருதயத்தில் இறுத்தி, மனதை புருவத்தினிடையிலும் கொண்டு செலுத்தி, பின் திரும்பவும் ஸத் - சித் - ஆனந்தமயமான உனது நிலையில் வரும்பொழுது சிவமாக நினைப்பது ஆச்சர்யமானது

(6)

शरीरेऽतिकष्टे रिपौ पुत्रवर्गे
सदा भीतिमूले कलत्रे धने वा।
न कश्चिद्विरज्यत्यहो देवि चित्रं
कथं त्वत्कटाक्षं विना तत्व बोधः॥

சரீரேSதிகஷ்டே ரிபௌ புத்ர வர்கே
ஸதாபீதி மூலே கலத்ரே தநே வா।
ந கஸ்சித் விரஜ்யத்யஹோ தேவி சித்ரம்
கதம் த்வத்கடாக்ஷம் விநா தத்வ போத:॥

மிகக் கடிதான இந்த உடலிலோ, பகைவரிடத்திலோ, நண்பரிடத்திலோ பயம் நிரம்பிய மனைவி, செல்வம் இவற்றிலோ ஒருவரும் வெறுப்புக் கொள்வதில்லையே ஹே தேவி, இது விந்தையல்லவா! உனது அருளின்றி உண்மை ஞானம் உண்டாவது எப்படி?

(7)

शरीरे धनेऽपत्यवर्गे कलत्रे
विरक्तस्य सद्देशिकादिष्टबुद्धेः ।
यदाकस्मिकं ज्योतिरानन्दरूपं
समाधौ भवेत्तत्त्वमस्यम्ब सत्यम् ॥

சரீரே தநேऽபத்ய வர்கே கலத்ரே
விரக்தஸ்ய ஸத்தேசிகாதிஷ்ட புத்தே:।
யதாகஸ்மிகம் ஜ்யோதிரானந்த ரூபம்
ஸமாதௌ பவேத் தத்வமஸ்யம்ப ஸத்யம் ॥

உடல், செல்வம், பெண்டு பிள்ளைகள் ஆகியவற்றில் பற்று வைக்காமல் சீரிய குருவின் ஆணைப்படி செல்பவனுக்கு ஒருவேளை ஸமாதி நிலையில் பேரானந்தப் பேரொளியின் தர்சனம் கிடைக்குமானால், ஹே அம்ப! அதுவே தத்வ ஜ்ஞானம். இது உண்மை.

(8)

मृषान्यो मृषान्यः परो मिश्रमेनं
परः प्राकृतं चापरो बुद्धिमात्रम् ।
प्रपञ्चं मिमीते मुनीनां गणोऽयं
तदेतत्त्वमेवेति न त्वां जहीमः ॥

ம்ருஷான்யோ ம்ருஷான்யஃ பரோ மிச்ர மேநம்
பரஃ ப்ராக்ருதம் சாபரோ புத்திமாத்ரம்।
ப்ரபஞ்சம் மிமீதே முனீநாம் கணோऽயம்
ததேதத் த்வமேவேதி நத்வாம் ஜஹீமஃ॥

முனிவர் கூட்டத்தில் ஒரு சாரார் இந்த பிரபஞ்சம் பொய் என்றும், மற்றும் ஒரு சாரார் 'ஆம் பொய்யே' என்றும், வேறு சிலர் கலப்பானதென்றும், சிலர் ப்ராக்ருத (இயற்கையாகத் தோன்றியது) பிரபஞ்சம் என்றும், மற்றும் சிலர், அவ்வாறு அறிவுக்கு உள்ளாவதென்றும் கூறுவர், உண்மையில் நீயே தான் இந்த பிரபஞ்சமெல்லாம் என்பதால் உன்னை விடமாட்டோம்.

(9)

निवृत्तिः प्रतिष्ठा च विद्या च शान्ति –
स्तथा शान्त्यतीतेति पञ्चीकृताभिः ।
कलाभिः परे पञ्चविंशात्मिकाभिः
त्वमेकैव सेव्या शिवाभिन्नरूपा ॥

நிவ்ருத்தி: ப்ரதிஷ்டாச வித்யா ச சாந்தி:
ததா சாந்த்யதீதேதி பஞ்சீக்ருதாபி: ।
கலாபி: பரே பஞ்சவிம்சாத்மிகாபி:
த்வமேனகவ ஸேவ்யா சிவாபின்னரூபா ॥

ஸாதகர்கள் முதலில் நிவ்ருத்தி - ப்ரதிஷ்டை - வித்யை - சாந்தி - சாந்த்யதீதை என்ற நிலைகளை ஐந்து கலைகளால் பெருக்கி கிடைத்த இருபத்தைந்து கலை வடிவங்களால் சிவத்தினின்று பிரியாதவளாகக் கருதி நீயே ஸேவிக்கப்படுகிறாய்.

(10)

अगाधेऽत्र संसारपङ्के निमग्नं
कलत्रादिभारेण खिन्नं नितान्तम् ।
महामोहपाशौघबद्धं चिरान्मां
समुद्धर्तुमम्ब त्वमेकैव शक्ता ॥

அகாதேSத்ர ஸம்ஸாரபங்கே நிமக்னம்
கலத்ராதி பாரேண கிந்நம் நிதாந்தம் ।
மஹாமோஹ பாசௌகபத்தம் சிரான்மாம்
ஸமுத்தர்துமம்ப த்வமேகைவ சக்தா ॥

ஆழமான இந்த ஸம்ஸாரமாகிய சகதியில் மூழ்கி மனைவி மக்கள் என்ற சுமையால் மிகவும் நொந்து விட்டது மட்டுமின்றி பெரும் மோஹம், பாசம் ஆகியவற்றால் கட்டுண்டும் கிடக்கும் என்னை மேலே தூக்கி விட, ஹே தாயே நீ ஒருவளே முடிந்தவள்!

(11)

समारभ्य मूलं गतो ब्रह्मचक्रं
भवद्दिव्यचक्रेश्वरीधामभाजः ।
महासिद्धिसंघातकल्पद्रुमाभा –
नवाप्याम्ब नादानुपास्ते च योगी ॥

ஸமாரப்யமூலம் கதோ ப்ரஹ்மசக்ரம்
பவத்திவ்ய ஸங்காத கல்பத்ருமாபாந்।
மஹாஸித்தி ஸங்காத கல்பத்ருமாபாந்
அவாப்யாம்ப நாதாநுபாஸ்தே ச யோகீ ॥

ஹே அம்ப! யோகியாகத் திகழ்பவன் முதலில் மூலாதாரம் தொடங்கி பிரஹ்ம சக்ரம் வரை சென்று அங்கு கோலோச்சும் சக்ரேச்வரியின் ஸந்நிதியில் இருக்கும் பல ஸித்திகளைப் பெற்று, கல்பகம் போன்ற மஹாநாதத்தை உபாஸிக்கிறான்.

(12)

गणेशैर्ग्रहैरम्ब नक्षत्रपङ्क्त्या
तथा योगिनीराशिपीठैरभिन्नम् ।
महाकालमात्मानमामृश्य लोकं
विधत्से कृतिं वा स्थितिं वा महेशि ॥

கணேசைர்க்ரஹை ரம்ப நக்ஷத்ரபங்த்யா
ததா யோகிநீ ராசிபீடைர பின்னம் ।
மஹாகால மாத்மாநமாம்ருச்ய லோகம்
விதத்ஸே க்ருதம் வா ஸ்திதிம்வா மஹேசி ॥

கணேசர்கள், க்ரஹங்கள், நக்ஷத்ரங்கள், இன்னும் யோகினீ ராசிபீடங்கள் இவற்றினின்று வேறுபடாத 'மஹாகாலர்' என்றே தன்னை பாவித்து உலகமனைத்தையும் ஆக்கவும் காக்கவும் செய்கிறாய் ஹே தாயே!

(13)

लसत्तारहारामतिस्वच्छचेलां
वहन्तीं करे पुस्तकं चाक्षमालाम्।
शरच्चन्द्रकोटिप्रभाभासुरां त्वां
सकृद्भावयन्भारतीवल्लभः स्यात्॥

லஸத்தார ஹாரா மதிஸ்வச்சசேலாம்
வஹந்தீம் கரே புஸ்தகம் சாக்ஷமாலாம்।
சரத்சந்த்ரகோடி ப்ரபா பாஸுராம் த்வாம்
ஸக்ருத் பாவயன் பாரதீவல்லபஃஸ்யாத்॥

அழகிய பெருமணிமாலையும், வெண்பட்டுச்சேலையும், அணிந்து கையில் புத்தகமும், ஜபமாலையும் வைத்துக் கொண்டு, சரத்கால சந்த்ரன் போல் தெள்ளத் தெளிவாய் விளங்கும் உன்னை ஒரு தடவையேனும் தியானிப்பவன் ஸரஸ்வதி கடாக்ஷம் பெற்றுத் திகழ்வானே!

(14)

समुद्यत्सहस्रार्कबिम्बाभवक्त्रां
स्वभासैव सिन्दूरिताजाण्डकोटिम्।
धनुर्बाणपाशाङ्कुशान्धारयन्तीं
स्मरन्तः स्मरं वापि संमोहयेयुः॥

ஸமுத்யத்ஸ ஹஸ்ரார்க பிம்பாப வக்த்ராம்
ஸ்வபாஸைவ ஸிந்தூரி தாஜாண்டகோடிம்।
தனுர்பாண பாசாங்குசான் தாரயந்தீம்
ஸ்மரந்த: ஸ்மரம் வாயி ஸம்மோஹயேயு:॥

உதித்து வரும் ஆயிரமாயிரம் சூர்ய பிம்பம் போன்று ஒளிரும் முகமுடையவளும், தனது ஒளியினால் சிவக்கச் செய்யப்பட்ட பிரம்மாண்ட கோடியையுடையவளும், வில், பாணம், பாசம், அங்குசம் இவற்றையும் தரிப்பவளுமான உன்னை தியானிப்பவர் மன்மதனையும் மோஹிக்கச் செய்வர்.

(15)

मणिस्यूतताटङ्कशोणास्यबिम्बां
हरित्पट्टवस्त्रां त्वगुल्लासिभूषाम्।
हृदा भावयंस्तप्तहेमप्रभां त्वां
श्रियो नाशयत्यम्ब चाञ्चल्यभावम्॥

மணிஸ்யூத தாடங்க சோணாஸ்ய பிம்பாம்
ஹரித்பட்ட வஸ்த்ராம் த்வகுல்லாஸி பூஷாம்।
ஹ்ருதா பாவயன் தப்த ஹேம ப்ரபாம் த்வாம்
ச்ருயோ நாசயத்யம்ப சாஞ்சல்யபாவம்॥

வைரம்பதித்த காதோலையின் செவ்வழகு தவழும் முகத்தையுடையவளும், பச்சை நிறப்பட்டாடையும், பல்வகை நகைகளும் பூண்டு, சொக்கத் தங்கமென பளபளக்கும் உன்னை உள்மனதில் தியானிப்பவர், வீட்டில் நித்யலக்ஷ்மீ வாஸத்தை அனுபவிப்பர்.

(16)

महामन्त्रराजान्तबीजं पराख्यं
स्वतो न्यस्तबिन्दु स्वयं न्यस्तहार्दम्।
भवद्वक्त्रवक्षोजगुह्याभिधानं
स्वरूपं सकृद्भावयेत्स त्वमेव॥

மஹாமந்த்ர ராஜாந்த பீஜம் பராக்யம்
ஸ்வதோ ந்யஸ்தபிந்து ஸ்வயம் ந்யஸ்த ஹார்தம்।
பவத் வக்த்ர வக்ஷோஜ - குஹ்யா பிதானம்
ஸ்வரூபம் ஸக்ருத் பாவயேத் ஸ த்வமேவ॥

மஹாமந்த்ரத்தின் முடிவில் பரபீஜாக்ஷரத்தை தன்ன டக்கிய பிந்துவும், தன்னடக்கிய ஹ்ருதயமும் கொண்டதாய் உனது முகமெனவும், மார்பகமெனவும், குஹ்யமெனவும் ஒரு தடவை தியானிப்பவர் உனது ஸாரூப்யமெய்வதுவர்.

(17)

तथान्ये विकल्पेषु निर्विण्णचित्ता –
स्तदेवं समाधाय बिन्दुत्रयं ते ।
परानन्दसंधानसिंधौ निमग्नाः
पुनर्गर्भरन्ध्रं न पश्यन्ति धीराः ॥

ததாऽந்யே விகல்பேஷு நிர்விண்ண சித்தா:
ததேவம் ஸமாதாய பிந்துத்ரயம் தே।
பரானந்த ஸந்தானஸிந்தௌ நிமக்நா:
புனர்கர்ப ரந்த்ரம் ந பச்யந்தி தீரா: ॥

மற்றும் சிலர், பல்வேறு வழிகளில் ஏங்கித் தவித்த பின், இவ்வாறு உனது பிந்துத்ரயத்தை மனதிலிறுத்தி, பேரானந்தக் கடலில் மூழ்கித் திளைத்து, தைர்யசாலிகளாய் மறுபிறவிக்கு இலக்காக மாட்டார்களே!

(18)

त्वदुन्मेषलीलानुबन्धाधिकारान्
विरिंच्यादिकांस्त्वद्गुणाम्बोधिबिन्दून् ।
भजन्तस्तितीर्षन्ति संसारसिन्धुं
शिवे तावकीना सुसंभावनेयम् ॥

த்வதுன்மேஷலீலாநுபந்தாதிகாரான்
விரிஞ்ச்யாதிகான் த்வத்குணாம்போதிபிந்தூன்।
பஜந்தஸ்திதீர்ஷந்தி ஸம்ஸாரஸிந்தும்
சிவே தாவகீநா ஸுஸம்பாவநேயம்॥

ஹே மங்களாம்பிகே! உனது குணங்களாகிய கடலின் துளிகள் போன்றவையும், பிரம்மன் போன்றவையுமான உனது விழிப்புணர்வின் தொடர் போன்ற சில அதிகாரங்களைப் பெற்றபின் ஸம்ஸாரக்கடலைக் கடக்க முயற்சிக்கின்றனர் என்பது நீ அவர்களுக்கு காட்டும் பரிவேயாகும்.

(19)

कदा वा भवत्पादपोतेन तूर्णं
भवाम्भोधिमुत्तीर्य पूर्णान्तरङ्गः ।
निमज्ज्न्तमेनं दुराशाविषाब्धौ
समालोक्य लोकं कथं पर्युदास्ये ॥

கதாவா பவத்பாத போதேந தூர்ணம்
பவாம்போதி முத்தீர்ய பூர்ணுந்தரங்க: ।
நிமஜ்ஜந்தமேநம் து ராசா விஷாப்தௌ
ஸமாலோக்ய லோகம் கதம் பர்யுதாஸ்ஸே ॥

ஹே தேவி! உனது திருவடிப் படகைப் பற்றிக் கொண்டு ஸம்ஸாரக் கடலை வேகமாகத் தாண்டி எப்பொழுது தான் மன அமைதி கொள்ளப் போகிறதோ இந்த உலகம்? கெட்ட ஆசை யாகிய விஷக்கடலில் மூழ்கி தத்தளிக்கும் இவ்வுலகை பார்த்தும் நீ ஏன் பேசாமலிருக்கிருயோ?

(20)

कदा वा हृषीकाणि साम्यं भजेयुः
कदा वा न शत्रुर्न मित्रं भवानि ।
कदा वा दुराशाविषूची विलोपः
कदा वा मनो मे समूलं विनश्येत् ॥

கதா வா ஹ்ருஷீகாணி ஸாம்யம்பஜேயு:
கதா வா ந சத்ரு: ந மித்ரம் பவாநி ।
கதா வா துராசாவிஷூசீ விலோப:
கதா வா மனோ மே ஸமூலம் விநச்யேத் ॥

எப்பொழுதுதானோ இந்த விஷயேந்திரியங்கள் அடங் கிப் போக முற்படுமோ? ஹே பவாநி! எப்பொழுது பகைவரும் இல்லை, நண்பருமில்லை என்ருகுமோ? எப்பொழுது தானோ இந்த கெட்ட ஆசையாகிய பேதி தீருமோ? எப்பொழுது தான் என் மனம் அடியோடு செயலிழக்குமோ தெரியவில்லையே!

(21)

नमोवाकमाशास्महे देवि युष्म –
त्पदाम्भोजयुग्माय तिग्माय गौरि।
विरिंच्यादिभास्वत्किरीटप्रतोली –
प्रदीपायमान प्रभाभास्वराय ॥

நமோவாகமாசாஸ்மஹே தேவி! யுஷ்மத்-
பதாம்போஜ யுக்மாய திக்மாய கௌரி।
விரிஞ்ச்யாதி பாஸ்வத் கிரீடப்ரதோலீ
ப்ரதீபாயமான ப்ரபாபாஸ்வராய ॥

ஹே கௌரி! உனது உறுதியான திருவடித் தாமரைகளுக்கு நமஸ்காரத்தை ஸமர்ப்பிக்கிறோம். அந்த திருவடிகள், பிரம்மதேவன் முதலியோரின் அழகிய கிரீடம் வீதிவிளக்கென (வந்தனம் செய்யும்பொழுது) பிரகாசித்து, அதன் மூலம் மிகவும் பிரகாசிப்பவை அன்றோ!

(22)

कचे चन्द्ररेखं कुचे तारहारं
करे स्वादुचापं शरे षट्पदौघम्।
स्मरामि स्मरारे रभिप्रायमेकं
मदाघूर्णनेत्रं मदीयं निधानम् ॥

கசே சந்த்ரரேகம் குசே தாரஹாரம்
கரே ஸ்வாது சாபம் சரே ஷட்பதௌகம்।
ஸ்மராமி ஸ்மராரே ரபிப்ராயமேகம்
மதாகூர்ணநேத்ரம் மதீயம் நிதானம் ॥

கேசத்தில் சந்திரப் பிறையும், மார்பில் தண்டமாலையும், கையில் மதுரமான (இக்ஷு) வில்லும், அம்பில் வண்டுக் கூட்டமும், பரமேச்வரரின் ஒரேவித கருத்தும், மதம் செறியும் கண்ணும் உள்ள எனது பொக்கிஷத்தை தியானிக்கிறேன்.

(23)

शरेष्वेव नासा धनुष्वेव जिह्वा
जपापाटले लोचने ते स्वरूपे।
त्वगेषा भवच्चन्द्रखण्डे श्रवो मे
गुणे ते मनोवृत्तिरम्ब त्वयि स्यात् ॥

சரேஷ்வவே நாஸா தனுஷ்வேவ ஜிஹ்வா
ஜபாபாடலே லோசநே தே ஸ்வரூபே।
த்வகேஷா பவச்சந்த்ரகண்டே ச்ரவோ மே
குணே தே மனோவ்ருத்திரம் த்வயி ஸ்யாத்॥

ஹே அம்ப! உனது அம்புகளில் (பூக்களில்) மட்டுமே என் மூக்கு நிலைத்திருக்க வேண்டும்; உன் வில்லில் (கரும்பு) மட்டுமே என் நாக்கும், செம்பருத்தி நிறமொத்த உன் ஸ்வரூபத்தில் மட்டும் என் கண்கள் பதியட்டும். உன் தலையில் உள்ள சந்திரப்பிறையில் மட்டுமே என் சருமமும் உன் குணத்தில் மட்டுமே என் காதும், உன்னிடம் என் மனஎண்ணம் முழுதும் பதிந்து இருக்கட்டும்.

**(24)**

जगत्कर्मधीरान्वचोधूतकीरान्
कुचन्यस्तहारान्कृपासिन्धुपूरान्।
भवाम्भोधिपारान्महापापदूरान्
भजे वेदसाराञ्शिवप्रेमदारान्॥

ஜகத்கர்மதீரான் வசோதூத கீரான்
குசந்யஸ்தஹாரான் க்ருபாஸிந்துபூரான்।
பவாம்போதிபாரான் மஹாபாபதூரான்
பஜே வேதஸாரான் சிவப்ரேமதாரான்॥

உலகவேலைகளில் தீரம் மிக்கவளும், பேச்சினால் கிளியையும் மிஞ்சுபவளும், மார்பில் மாலை அணிந்தவளும், கருணைக்குகடல்போன்றவளும், ஸம்ஸாரக்கடலைக்கடந்தவளும், பெரும்பாவங்களுக்கு எட்டாதவளும், வேதக் கருத்தாகவும் அமைந்த சிவபிரான் அன்பு மனையாளை சேவிக்கிறேன்.

**(25)**

सुधासिन्धुसारे चिदानन्दतीरे
समुत्फुल्लनीपे सुरत्नान्तरीपे।
मणिव्यूहसाले स्थिते हैमशैले
मनोजारिवामे निषण्णं मनो मे॥

ஸுதாஸிந்துஸாரே சிதானந்த நீரே
ஸமுத்புல்ல நீபே ஸுரத்னுந்தரீபே ।
மணிவ்யூஹஸாலே ஸ்திதே ஹைமசைலே
மனோஜாரிவாமே நிஷண்ணம் மனோ மே ॥

அம்ருதக்கடலின் திறண்ட ஸாரமானதும், சிதானந்தத்தின் நீர் போன்றுள்ளதும், மலர்ந்த நீபபுஷ்பம் (கரும்பச்சை) போன்றிருப்பதும், நல்ல வைரத்தீவாகவுள்ளதும், ரத்னகற்களின் மாளிகை போன்றதும், தங்க மண்டபாயிருப்பதுமான பரமேச்வரன் இடது பாகத்தைச் சுற்றி என் மனம் நிலை கொள்கிறது.

(26)

दृगन्ते विलोला सुगन्धीषुमाला
प्रपञ्चेन्द्रजाला विपत्सिन्धुकूला ।
मुनिस्वान्तशाला नमल्लोकपाला
हृदि प्रेमलोलामृतस्वादुलीला ॥

த்ருகந்தே விலோலா ஸுகந்தீஷுமாலா
ப்ரபஞ்சேந்த்ரஜாலா விபத்ஸிந்துகூலா ।
முனிஸ்வாந்தசாலா நமல்லோகபாலா
ஹ்ருதிப்ரேமலோலாம்ருத ஸ்வாது லீலா ॥

கடைக்கண்ணில் குறுகுறுப்பும், நறுமணமுள்ள அம்பு மாலையும், ப்ரபஞ்சம் என்ற மாயாஜாலமும், ஆபத்தாகிய ஏரியின் கரை போலவும், முனிவரின் அந்த: கரணத்தை இருப்பிடமாகவும், போற்றி வணங்கும் தேவர் கூட்டமும், ஹ்ருதயத்தில் அன்பும் கொண்ட அம்ருதத்தின் இனிமையான கேளிக்கையாகவல்லவா எனதன்னை விளங்குகிறாள்.

(27)

जगज्जालमेतत्त्वयैवाम्ब सृष्टं
त्वमेवाद्य यासीन्द्रियैरर्थजालम् ।
त्वमेकैव कर्त्री त्वमेकैव भोक्त्री
न मे पुण्यपापे न मे बन्धमोक्षौ ॥

ஜகத்ஜாலமேகத் த்வயைவாம்பஸ்ருஷ்டம்
த்வமேவாத்ய யாஸீந்திரியை ரர்த்தஜாலம் ।
த்வமேகைவ கர்த்ரீ த்வமேகைவ போக்த்ரீ
ந மேபுண்யபாபே ந மே பந்தமோக்ஷெள ॥

ஹே அம்ப! நீதானே இந்த உலகை - பொய்யான உலகை - ஸ்ருஷ்டித்தாய். நீதானே உலக விஷயங்களை நோக்கிச் செல்லவும் செய்கிறாய். நீயே செய்பவள், நீயே அனுபவிப்பவள். ஆகவே எனக்கு பாபமோ, புண்யமோ இல்லை, பந்தமோ மோக்ஷமோ கூட எனக்கு இல்லையே.

**(28)**

इति प्रेमभारेण किञ्चिन्मयोक्तं
न बुद्ध्वैव तत्त्वं मदीयं त्वदीयम् ।
विनोदाय बालस्य मौर्ख्यं हि मात –
स्तदेतत्प्रलापस्तुतं मे गृहाण ॥

இதி ப்ரேமபாரேண கிஞ்சித் மயோக்தம்
ந புத்வைவ தத்வம் மதீயம் த்வதீயம் ।
விநோதாய பாலஸ்ய மௌர்க்யம் ஹி மாத:
ததே தத்ப்ரலாப ஸ்துதம் மே க்ருஹாண ॥

இவ்வாறு அன்பின் மிகுதியால், என்னுடையது உன்னுடையது என்று உண்மை உணராமலேயே - ஏதோ சிலவற்றை சொன்னேன். அது சிறுவன் விளையாட்டிற்காகச் செய்த குறும்புத்தனமே. ஹே தாயே! இந்த எனது பிதற்றல் பனுவலை ஏற்றுக்கொள்ளேன்!

**தேவீ புஜங்க ஸ்தோத்ரம் முற்றிற்று**

